SRI R. SRINIVASA IYER : ஸார், மாதா மாதம் ரோடிலே விடப்பட்ட பஸ்களின் எண்ணிக்கையை அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். மொத்தம் சென்னையிலே ஓடிக்கொண்டிருக்கும் ஃப்ளீட் ஸ்ட்ரெங்த் என்ன? அதில் எவ்வளவு பர்ஸெண்டேஜ் மாதாந்திரம் ரோடிலே ஓடுகிறது?

THE HON. SRI V. RAMAIAH : இருக்கக்கூடிய ஃப்ளீட் ஸ்ட்ரெங்த்தில் சராசரி 80 சதவீதம் ரோடிலே ஓடிக்கொண்டிருக்கின்றன.

SRI T. T. DANIEL : May I know whether we are having enough number of buses to satisfy the needs of the growing travelling public?

THE HON. SRI V. RAMAIAH : We are increasing the number of buses as and when new chassis become available and also when there is demand.

*Brick Kiln (Vriddhachalam)*

* 1974 *Q.*—SRI S. RAMALINGA PADAYACHI : கனம் மின்சார அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தென்னாற்காடு மாவட்டம் விருத்தாசலத்தில் செங்கல் காளவாய் சுட்டதில் சுட்ட செங்கல்லில் பொன் போன்ற சன்னம் உருவி ஒன்று சேர்ந்து கல்லில் கலந்து தோற்றமளித்ததை அரசாங்கத்திற்குத் தெரிவிக்கப்பட்டதா?

(இ) அப்படியானால் நிபுணர்களைக் கொண்டு ஆராய்ச்சி செய்து பார்க்கப்பட்டதா?

THE HON. SRI V. RAMAIAH : (அ) No, Sir.

(இ) Does not arise.

SRI S. RAMALINGA PADAYACHI : ஸார், இந்தப் படிவங்கள் விருத்தாசலம் தாலுகாவில் ஆழமாக மண்ணைத் தோண்டியெடுத்து காளவாய் சுட்டதில் சுட்ட கற்களில் பொன்னைப் போன்ற படிவங்கள் காணப்பட்டதே, அது அரசாங்கத்திற்குத் தெரிவிக்கப்பட்டதா? அதன் மீது என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது?

THE HON. SRI V. RAMAIAH : இந்த தகவல்தான் அரசாங்கத்தினிடத்தில் இல்லை என்று சொன்னேன். கனம் அங்கத்தினரிடத்தில் தகவல் இருந்தால் தனியாக எழுதி அனுப்பினால் மேலும் பரிசீலனை செய்ய நான் தயாராக இருக்கிறேன்.